# தனிப்பாசுரத் தொகை.



பரிதிமாற் கலைஞன்

இயற்றியது.

முதற்பகுதி.

பதிப்பித்தவை : 1000 பிரதி

சென்னை
தாம்ஸன் கம்பெனியார்
பதிப்பித்தது.



1901.



விலை: அணா - 4.

# FOREWORD.



These Sonnets appeared in the *Jñana Bodhini*, a Tamil monthly, ably conducted by Mr. M.S. Purnalingam Pillai, B.A., and are published in this book-form by his kind permission and at the request of many of the author's friends. Sonnets in Tamil are a rare phenomenon, and the ideas embodied in these Sonnets, not to say anything of their structure, are partly novel to the pure Tamil public. Composed in the fitful intervals of the author's profession and study, these Sonnets might need touching up when the projected series shall have been completed. This book of Sonnets appears under a pseudonym as the author believes that a name goes for much in a critic's estimate of a literary work and wishes that the literary world should take his production for what it is worth and express its true opinion about it, unprejudiced or untrammelled by a name.

MADRAS,
*6th December* 1899.

# முகவுரை.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருக்குறள்.

தேருந்தோறும் இன்னலம் பயக்குந் தமிழ்மொழியிலே நடைபெற்று விளங்குஞ் செய்யுட்களெல்லாம் ஒருமுறைபற்றி மூன்று பிரிவினவாம். அவைதாம், சங்கமருவிய நூல்களெனப் புலவர்களான் மதிக்கப்படும் எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலியனவும், இடையிற்றோன்றிப் புராணகதைகளை மிகவுந் தழுவி உயர்வுநவிற்சியாதிய அணிகளையே தமக்கு அங்கமாகப் பெற்று நடைபெறுவனவும், இக்காலத்துத்தானே சங்கநூற்கடலிற்றிளைத்துப் பிரகிருதிதத்துவவுணர்ச்சியிலே விருப்புற்றுத் தம்மை யூக்குதற்கு ஆங்கில நூற்றுணையுங் கொண்டு செய்யப்படுவனவுமாம். இம்மூன்றனுள் இறுதியினின்றனவே இக்காலத்துப் புலவர் பலரானுஞ் செய்யப்படுநெறியினவாகலின் மிக்கவுறுதி பயத்தற்பாலவென்று வேண்டப்படுகின்றமையின் அப்பகுப்பிற்படுஞ் செய்யுட்களை உலகந் தழீஇக்கோடல் இயல்பே; மற்று ஆன்ற வொழுக்கமும் அதுதானே.

இத் தனிப்பாசுரத்தொகையும் அன்ன வொழுக்கத்தினையே மேற்கொண்டுளது. இதன் பாசுரங்களனைத்துந் தனித்தனிப் பதினாலடி நீர்மையவாய்ப் பல்வேறுவகைய பொருளினவாம். இன்ன செய்யுட்கள் இன்னுஞ் செய்தற்கிடனுண்டெனக் கோடலிற் சிறியேன் இதனை முதற்பகுதியென வெளியிடுகின்றேன்

இதுகாறும் புலவர்குழாம் பயின்றுவரும் இடைநிலை யிலக்கியங்களொடு மறுதலைப்பட்ட இலக்கணங்களை யுடையதென இந்நூல் சிற்சிலவிடங்களிற் புலப்படு னும் நூற்கருத்துணருமுன்னர் இதனையன்னதென் றிக ழற்க. நூலினை முற்றுமுணர்ந்த பின்னரும் இந்நூல் புரையுடைத்து இந்நூல் தக்கின்று எனவாளாது கூற லிற் பெரும்பயனின்றாம், இவ்விக்காரணங்களான் இஃது அப்பெயர்த்தெனச் சிறுமையினைத் தெருட்டா வாம்.

இனி யிந்நூலினை வெளிப்படுத்தும்வழி எழுதுவன் மெய்ப்பெயரை மறைத்துப் பரிதிமாற்கலைஞன் என்னும் புனைபெயர் நிறுத்தி வெளிப்படுத்துகின்றேன், நன்னூலொன்று செய்தானது புகழினையா னிசைப் பட்டொழிகவும் புன்னூலொன்று செய்தானதயர்ச் சியாற் சாலவும் புகழப்பட்டிலங்கலும் நாடோறுங் காண்டலினென்க. இவ்வாறு உண்மைமதிப்பு விளங் குக பொன்னையேயுமன்றி யானென் மெய்ப்பெயர் குறியாமையைப் பொருட்படுத்தாது நூலுட்காணப் படும் நற்றுகளை யெனக்கெடுத்துக்காட்டலேயன்றிப் பிழைகளைத் தாங்கொள்வனவற்றிற்கு என்பிழை பொ றையாராட்டலும் வேண்டுமென்று செந்தமிழ்ப்புலமிக் செம்மைசான்ற பெரியோரை நோக்கிக்கேட்டுக்கொள் கின்றேன்.

சங்கநூ லென்னும் பொங்குதே மலரிற்
'கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி!
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ'.

சென்னை
6/12/1899.

# பொருளடக்கம்.



—

# தனிப்பாசுரத் தொகை.

## I. கடவுள்.

### நேரிசை யாசிரியப்பா.

எங்கணும் விளங்குறு மிறைவனே! எண்குணந்
தங்கிய வொருபெருந் தலைவனே! ஒப்புயர்
வில்லா தோங்கிய வீசனே! என்றும்
எல்லாந் தானா யிலங்கிடும் பொருளே!
இன்பமொ டெழிலு மன்புட னருளும்
நண்ணிய நாதனே! புண்ணிய முதலே!
உருவுடை யாயோ? உருவிலி யேயோ?
உருவரு விலாயோ? உடையையோ? உணர்கி[லேன்.
என்னண மெளியே னின்னை யண்முகோ?
உன்னுமா றறியேன்; உணருமா றறியேன்.
பன்னுமா றறியேன்; பாடுமா றறியேன்.
வணங்குமா றறியேன்; வாழ்த்துமா றறியேன்.
இணங்கி யென்னையு மெடுத்துக்
காத்தல் வேண்டும் பூத்துநின் னருளே.

## II. அறிவு.

அறிவே! மக்கடம் மாருயிர்க் குறுதியே!
செறிவேய்ங் காடெனுந் தீவினை தனையடுத்
தெரிக்குந் தீயே! பெரிதுமென் மனக்களி
றடக்குமங் குசமே! கடக்கரு வாழ்க்கைக்
கடற்செல விற்றிசை காட்டுங் கருவியே!
என்னுள மன்னிய துன்னிரு டமித்தொளிர்
நந்தா விளக்கே! சிந்தா மணியே!
உன்னைத் துணைக்கொடிவ் வுலகினிற் பஃறொழின்
நன்ன ரியற்றிட நான்றுணி கின்றேன்.
ஆதலி னென்றனக் கேதமனு காது
நலமிஃ தென்று மலமிஃ தென்றும்
பகுத்துக் காட்டியும் மிகுத்துச் செல்வழி
மேற்சென் றிடித்தும் மேவுதி
மாற்சிறு பருவ மைந்தனென் னயலே.

---

## III. அன்பு.

அன்பே! அன்பே! அழகுசா லன்பே!
என்பே ருளமகற் கியைந்த செவிலியே!
இவ்வுல கென்னுஞ் செவ்விய காட்சி
காணிடத் தலைவியே! பாணியா தேற்றி.
உன்வய மென்ற னொருமக வோர்தி.
தன்வய மாவவன் றனைச்செல விட்டிடேல்.
துன்பம் விளைக்குந் தொழில்புரி யாவணம்

இன்ப மளிப்ப தெதுவே யாயினும்
எடுத்துக் காட்டியும் அடுத்து நின்றுபல்
நண்பர் தம்மொடும் நலமுறக் கூட்டியும்
பண்படுத் திடுதல் பாவாய்! நின்கடன்.
உன்மக னருளோ டுறையுமா றவனை
நன்மையாப் போற்றி நாளும்
ஏர்பெற விருத்திச் சீர்பெற வளர்த்தியோ.

---

## IV. துயில்.

துயிலே! மாநுடர் துணையே! இமையினில்
நயனுற நடிக்கும் நலங்கனி நாரியே!
வருந்திய மனக்குப் பொருந்திய மருந்தே!
விண்ணவர் தமக்கும் மேவரி தாகி
மண்ணுல கினர்க்கு வாய்த்தபே ரமுதே!
ஊக்க முயர்த்தி யாக்க மளிக்குறும்
அம்மையே! சுகந்தரு மனைத்தினுஞ் சிறந்ததே!
இம்மையிற் செம்மைசா லின்ப ஊற்றே!
உன்னைத் தணந்தா ரொருபொழு துய்வரோ?
நின்னியல் புணரா நீசரே யிகழ்வார்.
செய்யவ டௌவையாச் செப்புநர் கருத்தென்?
செய்யவ டன்னினுஞ் சிறந்தனை யென்பதே.
இகழ்ச்சியோ விதுதான்? இயம்புதி;
புகழ்ச்சியே யன்றோ? பொருகவற் பகையே!

---

## V. மலர்.

மலரே! மலரே! என்மனம் மலர
மலரும் மலரே! மலர்ந்துசெறி மணமும்
நின்னைக் காண்புழி யின்மல மாகுமே!
மன்னிய பைந்தமிழ் மணங்கூர் மலரே!
துன்பப் பேயினைத் தொலைக்கும் பொருளே!
இன்பமே திரண்டோ ரின்னுரு வெடுத்த
தென்றுஞ் சிறப்புட னெழில்கொளு மலரே!
நின்னைக் காண்டொறும் நெஞ்சங் குதிகொள்
கின்றது! மகிழ்ச்சி துன்றிப் பொங்கித்
ததும்பு கின்றது! விதும்பலு முற்றேன்
உன்னை மேவி பொருமுத் தங்கொள.
என்னை நோக்கி யிளநகை புரிதியோ?
மெல்லிய மலரோ! விளம்புதி
புல்லறி வாளனும் பொய்ம்மை யேற்கே.

---

## VI. கடல்.

வாழிய கடலே! வாழிய கடலே!
உலகினுக் கியைந்த வொருதுணைக் கருவியே!
அலகிலா வுருவ மடைந்தோய்! நிலத்தினை
யாக்கி யன்புடன் காக்கும் பரவாய்!
உன்னை யடுத்துவந் துறுநா வாய்களை
நன்னர்ச் செலுத்து நங்காய்! நின்னிளங்
காதற் றலைவனுங் காற்றி னனம்

போத மென்னும் புனிற்றிள மகனென்
உயிர்த்தொகை யோடு பயிர்த்தொகை மகிழத்
தாவா வின்பந் தருந்தனித் தாயே!
ஓவா தொல்லென வொலிக்குங் கடலே!
உன்றன் பெருமையு முயர்வுங் கருணையுந்
துன்றுமடி யின்மையுந் தூய்மையும்
என்றனாலெடுத் தியம்ப வியலுமோ?

---

## VII. முகில்.

முகிலே! மைந்நிற முகிலே! கடன்மகள்
பயந்த மகவே! நயந்திவ் வுலகினைக்
குளிர்செய் ததனுயிர்க் குழுவினை யென்றுங்
களிசெயு முருசெய கருவியே! அறத்தினுக்
காக்கமே! பொருளிற கரும்பெறற் றுணையே!
போககரு வாகடப் பொல்லா நோய்க்குநன்
மருந்தே! நீயெழுந் திருந்துவான் பொழிவது
தண்ணீ ரென்கோ? தயைமிக் கூர்ந்தெழு
கண்ணீ ரென்கோ? சமைச்சா றென்கோ?
தேம்பா லென்கோ? தெள்ளமு தென்கோ?
ஏம்பலுற் றென்றுள மினைத்தென் றுணர்ந்தின்று.
அம்ம! நீ யெப்புற வாற்றுமா றறிந்தேன்.
எம்மையு மன்னதே யென்கட
னெனக்குறிக் கொண்டே னெனக்குறு காட்டே

---

## VIII. மலை.

மலையே! பல்லுயிர் வாழு மில்லமே!
வறந்த காலையுஞ் சிறந்தவி வள்ளலே!
வெருளாக் குறவரும் மருளுங் குன்றமே! [ய்!
துளக்கமில் லேற்றமொ டளக்கொணா வளவினை
வேனில் வெங்கதிர்க் கானல் பொறாதுனை
மேவுமக் கட்கு ஈவிய குளிர்ச்சி
செய்யுங் குறிஞ்சிச் செல்வனே! காதலால்
நையுந் தலைவனும் நற்றலை மகளும்
வரைவிட லுதலின் வரைப்பெய நினையோ?
மல்லுடை மையினான் மலையென் றனரோ?
அல்லது நின்றனை யனைவருங் கண்டு
மலைத்திடு வதனால் மலையெனப் பெற்றையோ?
நிலைத்திணை யரசே! நிகழ்த்துதி
கயலுகள் யாறெனும் நயமகட் கன்னையே!

---

## IX. யாறு.

யாறே! தீம்புனல் யாறே! ஓவா
திழுமெனு மோதையி னொழுகிடும் யாறே!
முகிற்குழா முறங்கு நகத்தினிற் பிறந்து
தவழ்தர லுற்று நவமணி யோடு
வேழவெண் மருப்புங் சாழகிற் றுணியுங்
கழங்கென வெறிந்து தழங்கொலி மேவிச்
செல்கதி மிகுத்துப் பல்பொழி லோடி

மரம்பெய்ம் மலர்களை விரும்பி யணிந்து
குளம்பல நிறைத்து வளம்பெற வைத்துப்
பொன்னினைக் கொழித்து மன்னுறு நங்காய்!
என்னை நின்விளை யாட்டு! மற்றம்ம!
கொன்னே யொன்றுங் குயிற்ற லொருப்படாய்.
எவர்சிறை செய்திட ரியற்றினும்
அவர்தமைப் புரக்குநின் னன்பென் சொல்கோ!

---

## X. பரிதி.

பரிதியே! விரிகதிர்ப் பரிதியே! எங்கணும்
ஒளிசெயும் பொருளே! உலக மனைத்துங்
களிசெயுஞ் செல்வக் கடவுளே! உயிரெலாந்
தத்தம தொழில்களை நித்தலும் புரியுமா
றேவுநற் றலைவனே! வாவிசேர் தாமரைக்
கிழவனே! பலர்புகழ் மழவிள ஞாயிறே!
அலகிலண் டங்க ளாண்டிடு மரசே!
உலகின் கண்ணே! உன்னரு ளின்றி
அறமும் பொருளுஞ் சிறிது மியலா;
வானம் வறக்கும்; தீளுஞ் சிறக்கும்;
ஞான மிறக்கும்; மானம் பறக்கும்;
உயிர்க ளுயங்கும்; பயிர்க டியங்கும்;
என்கொல்? நின் கருணை யென்கொல்?
நன்குற வாற்றும் நாத! விண் மணியே!

---

## XI. மதி.

மதியே! தண்ணொளி மதியே! வானதி
காட்டும் வெள்ளையங் கமலமே! இளஞ்சிறார்
வேட்டு நாடொறும் விளையாடு மாமிளிர்
குளிர்வெண் டிங்காள்! களிகடற் றலைவா!
அமுதக் கதிரோய்! குமுதக் கிறைவா!
மதுவுடை மையினுன் மதிப்பெய ரினைகொல்?
அன்றி யறிஞர்க ணின்றனைக் கண்டு
மதித்திடு வதனுன் மதியென் றனர்கொல?
தான்றளர் வெய்தினும் வான்றனிற் றோன்றி
உலகின் புறச்செய வலசந் திரனே!
சீதக் கலையோய்! காதற் கருவியே!
இரவிபா லொளிபெற் றிரவொளி செய்வோய்!
உன்போல் யாரே யுலகினில்
பன்பே ரருள்புரி வள்ள லாவரோ?

---

## XII. விண்மீன்.

விண்மீ னினங்காள்! விண்மீ னினங்காள்!
வற்கடஞ் சென்றுழி வள்ளலார் போல
அற்கடன் மான வதிர்ந்தெழு ஞான்று
கலைமதி தணந்த காலையு மொளிசெய்
துலைவின் றுலகினர்க் குதவுங் கருவிகாள்!
நீல்க் கம்பலத் தேலப் பரப்புபு
செயிர்தீர்ந் திலங்கும் வயிரமணி யென்கோ?

விண்ணினுங் கடலினும் மேவுறுத் தென்கோ ?
நீலவான் படத்தி னிகழ்புனை வழித்தெரி
கோலமார் கயிலைக் குன்றினொளி யென்கோ ?
விண்டங்கு வெள்ளை யண்டங்க ளென்கோ ?
வானமா மலையிலே மோனனி மிளிரும்
புனற்றுளி யென்கோ ? புகலுமின்
மினற்றனை கொண்டவெண் பனிநலங் காலே !

---

## XIII. கல்வி.

கல்வியே ! மக்கடங் கண்ணே ! புலவர்தஞ்
செல்வியே ! மனத்தின் செவ்விய வுணவே !
நின்னெறி பயிறல் மன்னிய மாந்தர்
தமக்கும் பிறர்க்குந் தவிர்ப்பே ரின்பம்
கரும்பயிற் றற்குக் கைக்கூலி போலத்
தரும்பொரு ளே ! உயர் தகைமுத்தி வித்தே !
பரந்த பாரினும் விரிந்த வானினும்
எண்டிசை யின்கணும் பண்டிசை போகிய
பாவலர் நாவினும் பரிவுடன் மேவி
ஆவலின் விளையாட் டயர்தரு மங்காய் !
கதுமென நின்னைக் கைப்பிடித் தோர்தமக்
கெதுவுநன் றடே ! எதுவுநல் லுரே !!
ஆகவு மென்கொ லநேகர்
உனைக மின்றிநா ளுலப்பவிட் டனரே ?

---

## XIV. பொழில்.

பொழிலே! கழியபைம் பொழிலே! தாமரை
வாவியாம் பாங்கியோ டாவலிற் பயில்வோய்!
முகின்மணி மகுடமா நகில்செய் குன்றமா
மருகமண் டபத்து ளரசுவீற் றிருக்குஞ்
சோலையஞ் செல்வியே! குமரன் படைக்கலச்
சாலையே! மந்தாருவின் றனிநட வரங்கே!
காமபமா வெயிர்ப்பதங் கலைமக்க டம்மை
யிமையவ ராம்பொழு தினிதினி தாக
அமைபு கொணர்ந்துறு மழகுசா லிடமே!
இன்பப் பொருளே! இம்ப ரெய்திய
ஆனந்த வுலகே! தேனந்து காவே!
பிறரைக் காக்கப் பொருவ தன்றியும்
பிறனைக் காக்கும் பெற்றியாற் [பரே!
காவெனப் பெற்றனையோ? காவலர்ப் பொதும்

---

## XV. குரு.

குருவனை; ஞானத் திருவனை; மாந்தர்
கருக்கிளைத் தபுக்கு முருக்கியர் தேவனை;
மருள்வழி புகாது தெருள்வழி காட்டுபே
ரருண்மொழி யண்ணலை; ஆருயிர்த் துணையை;
உளமெனு மிருட்டறைக் கொளியுணர் விளக்கம்
வைத்துப மடவிரு ளிரியத் துமிப்பான்
தோற்றுமென் றுரையை; நற்குணக் குன்றை;

மன்றமெய்ப் பொருளினை வாய்மலர்ந் தருள்பெ
மன்ற வாணனை ; மாசறு மணியை (றுன்
ஆதலெய்த் திருக்கென வோதலைத் தவிர்கலென்.
நின்றாட் புணைகலந் தக் கடக்கிய
ஒன்றா தம்ம வுயங்குத லெவனோ
பொழிந்துதேன் கமழ்பூப் பொருந்தா
திழிந்தவை விழைந்துழ லீயென மாதோ ?

---

## XVI. உடல்.

அருட்பயிர் தழைக்கு மணிபெறு கன்னிலம் ;
தெருட்பயன் பெய்யுந் செவ்விய களஞ்சியம் ;
அநுபவ ஞான வையக் கடிநாறு ;
தநுவுறி யார்மடக் கினைய் வதற்கு ; மா
றுபெறு மோலிய மொளிர்தர வரைகிரி ;
செயிர்தீ ருடலஞ் சீர்த்தவக் கருவி ;
கல்லற மாமணி ; காடொறு மிதனை
இல்லற வாழ்க்கை யென்ற சாலையிற்
பிடித்து மாசினைப் பெரிதும் போக்கி
யெடுத்துற பயன்கொள வெண்ணுகி லாது
துறவே சிறந்ததென் றறவே மதிமருண்
டையகோ மிகவு மரும்பெறல் யாக்கையை
நொய்யதா நினைத்துள நொந்து
வறிதே கெடுத்து வெறியாட் டயர்வலோ?

---

## XVII. நிலன்.

நிலனே! என்றும் நிலைபே றுடையாய்!
புலனிலாப் புல்லர் நீ பொய்யெனப் புகன்று
மாளா வுலக வாழ்க்கையைத் துறந்து
மாளா நிற்பர் மதிகெட் டையகோ!
அகழுநர்த் தாங்கு மரும்பொறை மேவி [னை;
இகழுநர்ப் பொறுக்கு மெழிலுளோர் போன்ற
அதுமாத் திரையோ? அயர்தடக் கினிய
விதமா நன்னயம் வேண்டுந பரிகுவை;
ஞாயிறு நோக்கியெஞ் ஞான்று முருளுபு
பாயிரு விரவும் பகலுஞ் செய்து
மன்னுயிர் புரக்கு மாண்பும் பெருமையும்
பன்னருந் திண்மையும் பருவ முயற்சி
யானிற் பயத்துமேற் றளர்வின்று
முயலுமா றேவு மியலுமென் னெஞ்சே?

---

## XVIII. இரவு.

ஞாயிறு மறைந்தது; தண்மதி யுதித்தது;
பாயிரு ஞாலம் மகிழ்வடங் கிற்று;
மின்னின விண்மீன்; துன்னின கன்னிருள்;
மன்னின மனைதொறும் மாவொளி விளக்கம்;
குவிந்தன தாமரை; அவிழ்ந்தன குமுதம்;
மல்லிகை முல்லை மலர்ந்து கமழ்ந்தன;
கூகை குழறின; கூத்தொலி கேட்டன;

சோக மொடுங்கின; குலவின சகோரம்;
களவு விரும்புந ரளையிற் கரியேய்தினர்;
வேலை செய்குந ரேலவலி பெற்றனர்;
இறுதிக் காலத் துறுதிதோன் றிற்று; அதான்
றேழையேம் போலிய வின்ப முற்றனர்;
வாழிய வீரவே! வாழிய
ஊழி யூழியி னுலகின் மேனியே!

---

## XIX. காலை.

உலகமா மங்கைதன் றலைவரும் பரிதிகண்
டொல்லெனக் கிழித்திசை யொண்முகஞ் சிவந்து
மெல்லெனப் புள்ளொலி யிசைத்துப் பாடி.
அலக்கணு மின்றி மலர்க்கணீ ருகுத்து
மாட்சிசேர் பொன்னுடை மகிழ்ந்தத் துடுக்குமிக்
காட்சி யென்னே! காலைப் பொழுதுகொல்?
பொன்னுல கேவலன் மன்னிய தென்கோ?
மண்ணுல கிதுதான் விண்ணுல காகி
மிளிர்கின்ற தென்கோ? ஒளிர்கின்ற வெங்கதிர்க்
கற்றை மேற்படீஇக் கண்டரு பொன்னிறம்
பெற்றதிப் பாரென்கோ? பிறழ்தருந் தோற்றப்
பொன்மையிற் றீட்டிய நன்மைசேர் சித்திரப்
படாமென்று மொழிகோ பரவையை
அடாநின்ற ஞாலமா னதிப் பொழுதினே?

---

## XX. வளி.

வளியே! பரந்த வெளியி னுலவுறூஉம்
வளியே! ஒருகால் வழங்குத லின்றிப்
பக்குவத் தலான்வெளிப் படாவிறை போல்வை;
தக்கவா றிழிந்து தவழ்ந்து மெல்லெனத்
தென்றலங் காலாய் மன்றன் மணமளாய்
மக்களின் புறுவா னெக்க வியங்குபு
சாமரை மகளிர் தாமெனப் போலினை;
சூறெனப் புகுந்து புச்செனப் போந்து
மன்னுயி ரனைத்தையு மன்னனிற் காப்பை;
ஞாலந் தனிற்றீ நாற்றம் மிக்குழி
மேலவே நறையா யொழுக்கிற் றொழிய
மண்டிமேற் சென்று தண்டத் தலைவனை
ஒப்பை! அம்மம்ம! உன்போல்
ஒப்புர வாளரு முளரோ தொல்லை யாயினே?

---

## XXI. இசை.

இசையெனப் பெயரிய வின்பப் பொருளே!
நசையினைக் கொளிர்வா னண்ணிய செய்யே!
பண்ணொடு தாளம் பண்புற விசைதலான்
இசையென நின்பெய ரியம்பின ரென்ப.
அற்றன்று; கேண்மினை யாடவர் துறந்தோர்
கற்றொன்று மறியாக் கன்மனப் பெண்டிர்
மற்றும்பஃ றியியன் மன்னிய மாக்கள்

கொடிய விலங்குகள் கடுவுடை யரவுகள்
ஆகிய வெல்லா மேதமின் றடக்கி
நின்னையப் பரித்து நோன்மையி னிசைக்கும்
இயல்பினை யன்றே யிசைபெறப் பெற்றனை?
கூடார் தம்மையுங் கூடச் செய்னை;
செவியின் வழுதே! செவ்விய [னே?
செல்வமே! யென்னெனச் சொல்வெனின் றுணை

---

## XXII. மனைவி.

கொண்ட தலைவனுக் கெண்டரும் பெற்றி
நாடி பொழுதிலும் வாடிய போழுதத்
துணைகூடு யிர் வசனங் களங்கமின் முறைத்தும்
இன்னிசை பாடி மன்னி யருகிருக்
தூக்க முயர்த்திய முயற்கையை யுணவிசை
ஆக்க முறுத்து மவன்சொற் கேட்டுத்
தான்மகிழ் வுறூஉந் தேன்மொழி யாட்டியாய்
இல்லறக் கலனை யியக்குங் காலுய்
இல்லிற் படர்ந்த முல்லையங் கொடியாய்த்
துன்பவிருள் போக்கி யின்பவொளி செய்யும்
நந்தா விளக்காய்ச் சிந்தா மணியாய்
இறைவ னளித்த வின்னுயிர்த் தலைவியாய்
இலகுறு மனைவியே யிம்மையில்
வுலகினைத் துறக்கமா வுறச்செயுந் துணையென.

---

## XXIII. புள்.

புள்ளே ! மென்சிறைப் புள்ளே ! பல்வகை
வண்ணமும் மேவிய வனப்புடைப் பறவாய் !
எண்ணிய வெண்ணமு மென்கொலோ? அறியே
னானுநின் புற்றுத் தன்னிசை யதனா [ன்
ஏனைய வுயிர்க்கு மின்பஞ் செய்குவை ;
வேண்டுழிச் செல்வை ; வேண்டுக புரிகுவை;
வேண்டா வென்றுநீ விழைசெயல் தகைக்குநர்
ஈண்டுச் சிலருளர். இன்ப வுருவினோய்!
கவற்சிகொண் டுழலுமக் கண்ணில்புன் மாக்கள்
ஐயகோ! நின்னை யருமையிற் பேணார்;
வெய்ய கணைகொடு வீழ்ப்பர்; அதாஅன்று;
நெய்பெய் தட்டிநிற் கும்மனைக் கமழ
எயிற்றிடை மென்று வயிற்றின்
இட்டு நாடொறுங் கெட்டுலை வாரே.

---

## XXIV. மனிதன்.

இயற்கை யொழுங்கி னினிதுகாண் புறாஉம் [ய
முயற்சிசால் பொருள்களுண் முதற்பொரு ளாகி
மாண்டகு மனித! இக் காண்டகு முலகிற்
புகைச்சா கடுகொண் டுகைத்தெல வேனுஞ்
சென்று நிலத்தினை வென்றனை! அதாஅன்று;
கடப்பருங் கடற்புனைக் கலன்கொடு கடந்து
தடுப்பல நீக்கித் தண்புனல் வென்றனை!

## XXVI. வளைவின்மகளிர்.

ஆடலு மழகும் பாடலுஞ் சான்ற
வளைவின் மகளிர்காள்! வளைவின் மகளிர்காள்!
இன்னிசைக் குயில்காள்! பன்னருங் கலைவலீர்!
நுங்கமக் கோர்சொல்; சிந்தை செய்ம்மினோ.
வாய்ப்பரு நலனெலாம் வாய்க்கப் பெற்றும் [ர்?
என்கொலோ நீவிர் புன்றொழின் மேற்கொண்டீ
பொதுமகளி ரென்னுமப் பொல்லாப் பெயரினை
கதுமென வொருவுமின்; கடிமணம் பூண்டு [க்
சிறப்பு மகளிராய்ச் சிறப்பினை யெய்துமின்.
வீழ்ந்த மகளிர்காள்! விரைவினி லெழுமின்;
ஆழ்ந்தசூழ் யாதினை யறிகலன் பற்றுமின்.
இற்றை ஞான்றுசில் லெய்யாப் புல்லர்போல்
அருளிலெ னென்றும் அறைவேன்.
மருளிற் றீர்க்துநீர் வாழிய! மாதோ.

---

## XXVII. இல்லறம்.

விழுப்பஞ் சான்ற வியத்தகு மில்லறம்
ஒழுக்க வியலறி வுறுத்துஞ் சாலையாய்
நன்மை தழைத்து ஞயக்கொடை நிழற்றி
மென்மை யரும்பி மேன்மை மலர்ந்தென
அன்பு காய்த்துநல் லருள்கனிந் தலகிலா
இன்பநறை பிலிற்று மினியகற் பகமாய்
இலகிடு முண்மை மலையிலக் கன்றே?

எத்துறுந் தகைய வில்லற மெனுமிம்
மாத்தடந் தேரினை வாழ்க்கையாம் போர்க்களஞ்
செலுத்துபு துன்பத் தியனா யெறிந்து
தொலைத்திட லறியார் துறவு துறவெனா
நாக்கடிப் பாக வாய்ப்பறை யறைந்து
மயக்கினும் மாழ்கலீர்! மாந்தர்காள்!
உயக்கமின் றில்லற வொழுகலா றடைமினே.

---

## XXVIII. அழகு.

அழகி னியல்பினை யநுபவித் தறியார்
பழகினர் போன்று பலபடப் பகர்ந்தனர்.
வண்ணமே வனப்பெனா வகுத்தனர்; அதான்று;
வடிவே யெழிலென வரைந்தனர்; அதான்று; நற்
குணமே கவினெனக் கூறினர்; அதான்று; [மற்
பயனுடைப் பண்பெனப் பரிந்தனர்; அதான்று;
றின்னும் பலவா யியம்பினர்; அவையல.
என்னே! அழகி னியலம் மம்ம!!
கண்டவர் மனத்தைக் கணத்திற் பிணித்திட்
டெண்டரு மாசை யெளிதிற் கொளுத்துபு
தன்வயப் படுக்குந் தன்மைய தன்றோ?
எல்லா நலனு மினிமையிற் கலந்த
இயல்புமஃ தன்றோ? இன்பஞ்
செயல்வல செவ்வியு மஃதே யன்றோ?

---

## XXIX. காதல்.

இம்மையின் பத்தி னினிய முதலாய்ச்
செம்மையி னிலகுறூஉஞ் சீரிய காதலே!
அனைத்தையுந் தன்வயம் நினைப்பினி லாக்குங்
கடவுட் டன்மை கவின்ற பொருளே!
ஆக்கப் படும்பொரு ளெல்லா விளைவே!
ஏக்கற்று நின்றவர்க் கெய்திய மருந்தே!
உடையு முருவும் நடையுங் குலனும்
ஒவ்வா தாரையு மொன்று படுத்துவை ;
செவ்வே யன்னார்தந் திணிமன மலர்த்துவை;
தற்செய லாகத் தனித்தெதிர்ப் படுநரை
இச்சை கொளுத்தி யிசைவுற வவர்மனந்
தம்மைச் சேர்த்துத் தகைபெற யாப்பை.
அம்மவோ ! நின்னா லன்றே
உலகி லொழுங்குறா விலகலின் றொழுகலே ?

---

## XXX. வரைவு.

இன்ப வூற்றாய்த் துன்பப் பகையாய்
இல்லற வாழ்க்கையி னல்லுயி ரேயாய்க்
காதலின் குறியாய்க் காமரு பிற்கிளை
ஏதமின் றாக்குதற் கேதுவாம் வரைவே !
தலைவனுந் தலைவியுங் கலமுறு காதலான்
இவ்வழிக் கண்ணே யியறு மென்றுதஞ்
செய்வினை வரைந்து தெய்வ மறியக்

கோடலான் வளைவெனுங் குழியிடு பெற்றனை;
மங்கலக் தவளை மண்ணுறுகல் பற்றி
மணப்பெய ரெய்தினை; வாய்ப்பா ரேமமா
நிற்றலிற் கடிப்பெய ருற்றனை மெய்யே.
மெள்ளநிற் கருதியோன்; உள்ளங் களித்தேன்;
உடலுஞ் சிலிர்த்தேன்! ஓகோ!
விடலுறு மெலிந்த வீணர்போ லாதே.

---

## XXXI. கற்பு.

கற்பென் பதுகலை கல்லாமை யன்று; மற்
றிற்படி கடவா திருத்தலு மன்று;
தீய வழியினிற் செல்வுழிக் கணவனை
யேயே யிஃதெனை யென்று இருந்து
வாயிலாப் பூச்சியாய் மன்னுத லன்று;
மாடுபோ லுழைத்துக் கூடி வாழ்ந்து
காலந் தன்னைக் கழித்தலு மன்று;
கலைவி சான்றாய்க் கலந்த தலைவன்
மனையற மாட்சியை மாண்புற வகுத்துக்
கற்பித்த லானது கற்பாம்; காதலன்
சொற்கட வாதவற் றாநெறி நிறீஇக்
கனவினும் வேறு காளையர் தம்மை
நினையா திருக்கும் நேர்மையே
யென்று கூறுப மான்றவான் றோரே.

---

## XXXII. மனன்.

வாழிய மனனே ! வாழிய மனனே !
ஐம்பொறி யென்னும் பைம்பரி களின்வாங்
குலக பாலரி னுலவித் திரிதியால் ;
புதியன வற்றுட் கதுமெனப் புகுதியால் ;
இனியவிவ் வுலகி னிருக்கு மெவற்றுளும்
மனிதனிற் சிறந்த மாண்பொரு ளில்லை, அம்
மனிதன் றன்னுள் வயங்கு மெவற்றினும்
மனனிற் சிறந்த மாண்பொரு ளும்மிலை
என்று கலைஞரா வியம்பப் பெறுதியால் ;
குன்றுறு குரங்கெனக் கூறுவ ரறியார் ;
நினைத்த விடனெலா நினைத்தவந் நொடியினே
சென்று சேர்தியால்; துன்றிய துணையே !
என்னைநின் விரைவு! என்னைநின்
ஆற்றல் ! என்றுறச் சாற்ற லரிதரோ.

---

## XXXIII. கணவன்.

ஓரிலாட் கோண்முறை யுற்ற தலைவனாய்
ஏருலா மனைக்கொடி யினிது படர்தர [தக்
வாய்த்தகொள் கொம்பராய் வான்குணம் பூத்
காய்த்துப் புகழ்நலங் கனிபயன் மரமாய்ப்
பணமணி தன்னைப் பரிவுடன் போற்றும்
பணியென மனைவியைப் பாதுகாக் குநனாய்த்
தன்னில் லாளைத் தனக்கிணை யாய

தலைவியா மதிக்குந் தன்மை யாளனாய்
வயங்குந னலனே நயங்கொளுங் கணவன்?
மற்றுள மார மணந்த தையலைச்
சற்றுமரு ளின்றித் தவிக்கிய புரியுநன்
கண்ணவ னேவக் காதலி தனக்கு?
புண்ணவ னென்றே புகல்வர்
மேதகு பொருளிய லோதுர வோரே.

---

## XXXIV. வாய்மை.

வாய்மையே! சிறப்பொடு மாட்சிசேர் குணனே!
மேற்கோ ளெவற்றினும் மேற்படு மியல்பே!
உள்ளது சொல்லலா முண்மையே! சிறிதும்
வேறுபா டுரையா மெய்ம்மையே! மாந்தர்தம்
ஒவ்வோ ருறுப்பு மோரணி கலனை
வெவ்வே றுகச் செவ்வே யுடைத்து;
கண்ணும் வாயும் நண்ணுங்கொ லணிகலன்?
கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மென்ப.
வாயினுக் கருங்கலம் வாய்மைநீ யென்பல்.
அறமெனுங் கடவு ளணிதரு முடியே!
பிறவுயிர் தமக்குப் பெட்பொடு நன்மை
விளைத்தற் கோவினின் னளத்தல் நேரிதோ?
என்னணம் பொய்ம்மெயாத் துன்னும்
நன்றுந் தீது மொன்றில வாகவே?

---

## XXXV. காமம்.

காமமே! சுடுதீக் காமமே! கடல்சூழ்
பூமியிற் றோன்றிய புகையின் கொடியே!
பற்றென் கணிகையர்ப் பெற்றதாய்க் கிழவியே!
அறிவி னொளியினை யறவே மறைக்கும்
மாசின் படலமே! பாசத் தளையினைப்
பூட்டி யாட்டிடும் பொல்லாப் பேயே!
வழிமறித் தடிக்கு மிழிதொழி லாளர்போல்
விழிமருட் டிக்கொடு வினையிச் செலுத்திநல்
லுள்ளத் தறுபொருட் பொள்ளெனக் கவர்வோய்!
நின்கையிற் பட்டு நிருபரெத் துணையரோ
நன்கறந் துறந்தனர்; நங்கைய ரெனையரோ
ஈன மெய்தினர்; ஞான முனிவரர்
மோனிலை குன்றினர்; வேறென்?
நினைத்தீக் குணனே! நினைத்தலுந் தீதே.

---

## XXXVI. வெகுளி.

வெகுளித் தீயே! வெகுளித் தீயே!
துறக்கும் மனத்தையுங் கறக்குங் காற்றே!
உற்ற குணக்கல னெற்றுஞ் சுறவமே!
உடற்பெரும் புற்றினின் றடன்றெழு மரவே!
தெள்ளிய வறிவின ருள்ளத் தடத்தையும்
பொள்ளென வழக்கும் புல்லிய கடாவே!
வீட்டுநூல் வலனையு மாட்டிடும் பேயே!

சேர்ந்தார்க் கோறல் சார்ந்த சினமே!
தீயரைக் காணிற் சேயரா யொதுங்குக
என்ற முதுமொழி நன்றென வோர்ந்தனென்;
நீயுந் தீயோய் தூயை யல்லையால்;
ஆதலின் விலகிப் போதுவல் யானும்.
நன்னெறி யொரீஇப் புன்னெறிச்
செலுத்துந் தன்மைய சிறுமைத் தியமே!

---

## XXXVII. மயக்கம்.

மயக்க விருளே! மயக்க விருளே!
இயக்க மென்னுஞ் சிறையகப் படுமுயிர்
தப்பியே காவகை தகைக்குறுங் கதவமே!
ஒப்பில்வான் மணியென வொளிருங் குரவர்
செப்புயர் மாற்றச் செங்கதிர் தோன்றலும்
புல்லிய ருளக்குகை புகுதுங் கூகாய்!
நல்ல நெறியினை நாடுபு மாணவர்
செல்வழிக் குழறுந் தீயையால்! உறுதிக்
கொடியி னுதவி கூட்டிடிற் களைகுவல்.
பொய்ம்மெய் யாகவு மெய்பொய் யாகவுந்
தருபொலா முகுரமே! தனித்தெருட் சூசியூ
டுருவுமா றுன்னை யுறக்கிழிப் பல். எனை
மெய்ப்பொருட் டலைவியின் விலக்கிடுந்
துய்ப்பல் வட்டையிற் றன்னுமான் ஞமலியே!

---

## XXXVIII. நூல்.

சீலஞ் சிறந்தொளிர் நூலென் பதுதா
னியற்கைப் பொருள்களி னினிய காட்சியாம்
பெயற்கார் குழீஇமழை பெய்தலுங் கற்றோ
ருள்ளச் செறுவி னுறுவிதை முளைத்துத்
தள்ளரும் பயிராய்த் தழைத்துக் கவியெனுங்
கதிர்க்குலை யின்று கவின்றொடர் நிலைப்படூஉ.
முதிர்ச்சொல் புலவர் முறைகளஞ் சென்றவட் [ல்
சொல்லினி தாய்ந்தபின் றொகுத்துய்த் திட்டந
லில்லமே யன்றோ வென்போ வியர்க்கு?
மாணவர் மனக்குடி பேணுபுத் தகமும்
பாவல வண்டர் படிதே மலரும்
ஆவலி னுடுகர்க் கன்புறு பொழிலுங்
கனிவுசேர் காரண குருவும்
பனுவ லென்னப் பகருமஃ தன்றோ?

---

## XXXIX. மாணவன்.

தந்தைக் குதவுந் தனிமகன் போல்
சிந்தைக் களத்தின் மேதக வெய்தியுந்
தலைவனை யிழையுந் தலைமகள் புரையக்
கலைவலா சானைக் கண்டுகளி சிறந்தும்
உருவைவிட் டகலா வொண்ணிழ லொப்பக்
குருவை யடுத்துக் குற்றேவல் செய்தும்
பரமனை வழிபடூஉம் பத்தன் மானக்

குரவனை மனத்திற் கொண்டு துதித்துங்
கார்பெயச் செழிக்குங் கழனி கடுப்ப
ஏர்பெறு மவன்சொலை யினிதுள மடுத்தும்
அரசற் கிறையிடு மவன்குடி யியையப்
பரசுபு நற்பதம் பைம்பொன் கொடுத்தும்
மன்னுந னேநன் மாணவ
னென்ன வருத்தன ரியல்புணர்ந் தோரே.

---

## XL. தொழில்.

மண்பே ருலக மண்டிணி ஞாலத்
தன்பின் வணங்கி யாற்றலா னன்றே
தொழிலெனப் பெற்றனை? விழுமிய துணையே!
நுன்றன் சிறப்பை நுனித்தறி கிலர்சில
ரொன்றலி லுரைபல வுரையா நின்றனர்.
ஓவா விலம்பா டுறினும் புன்றொழில்
ஆவா கொடிதென் றயிந்து தான்றனி
நற்றொழில் புரிதலே நன்று. இது நிற்க.
மற்றினி யொருவன் மகிழ்ந்துமேற் கொண்ட
தொழிலினைப் பிறர்தா மிழிவெனக் கூறினுங்
கைவிட லியான் கருந்தொழின் முடிக்குமேல்
மெய்வலி யொடுமவன் வீற்றுவள முடையான்
ஈதொரு தலையென் றியம்புவர்
மூதறி வுடைய முத்தமிழ் வாணரே.

---

## செய்யுள் முதற்குறிப் பகராதி.



